உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

(20424)

# திருத்தொண்டர்மாலை.

இது

ஸ்ரீமான்-மெ. அரு. நா.

இராமநாதச்செட்டியாரவர்கள்

விரும்பியவாறு,

சென்னை வித்வசிரோமணி

**வா. மகாதேவமுதலியாரவர்கள்**

எழுதிய

குறிப்புரையுடன்,

தேவகோட்டை:

மீனலோசனிமுத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதிகிருது௵ ஐப்பசி௴

1911.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.



அறுதிமுத்த சித்தருவாகிய ஸ்ரீகண்ட சிகண்ட பரமேசுவரன் திருவடிக்கமலங்களை மறுதி திரிகரணங்களையுஞ் செலுத்தி எஞ்ஞான்றுஞ் செருக்கறுத்த சீரியருங் கருத்தொண்டர் கருதரியாத் திருத்தொண்டத்தொகையுள் வீற்றிருந்தருளும் சேரியருமாந் திருத்தொண்டர் சரித்திரத்தை முன்னடியிரண்டினும், தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் திருக்குறள் வெண்பாவினைப் பின்னடியிரண்டினும் இட்டு யாத்த இவ்வரிய நூற்பிரதியொன்று ஸ்ரீமத்-நாட்டரசன்கோட்டை-பஞ்சாக்ஷரச்செட்டியாரவர்கள்பாலிருப்ப, ஷை செட்டியாரவர்கள் இது பெறுதற்குரியார் யாவரென நன்காய்ந்திருந்து திருமகளும் மருமகளுங் கலந்துறையப் பெற்று, மன்கொடையும் நன்னடையுமுற்று, அந்தக்கரண சுத்தியுஞ் சிவனடிப்பத்தியுமுற்றிய ஸ்ரீமான்-மெ. அரு. நா. இராமநாதச்செட்டியாரவர்களிடங் கொணர்ந்து தந்தனர், அதனைக் கையேற்று மகிழ்ந்த அவர்கள் அச்சிற்பதிப்பிக்க வெண்ணிய குறிப்புரை யெழுதுகவென்று கூற என் சிற்றறிவிற் கெட்டினமட்டும் எழுதினேன்.

ஸ்ரீமான்-வயி. மு. சோமசுந்தரச்செட்டியாரவர்களும் இவ்வரிய நூல் வெளிவருவதற்கேற்ற முயற்சியிற் றலைநின்றனர்.

இந்நூலாசிரியர் பெயரும் வரலாறும்,

"பன்னு கலைக்குப் பரதிராச முனிவன்
சொன்ன தமிழ்ப் பாவை துதிப்பதற்கு—மின்னுமலை
மாயிலை வாயிற்றிறை னன்றி பெயர்கொளோ
னாயிருநா வுக்கின் மகிழ்ந்து." என்னுஞ்

சிறப்புப்பாயிர வெண்பாவான் அறியக்கிடக்குமாறு காண்க. அவரைப்பற்றிப் பிறிதொன்று மறிதற்கிடனின்று.

 வா. ம.

சிவமயம்

# திருத்தொண்டர்மாலை.

## பாயிரம்.

தூண்டா விளக்கருள்செய் தொண்டத் தொகையினைப்பி
யாண்டாரந் தாதிமுறை யன்பாலோர்க்—கீண்டியன்ற
வள்ளுவர்நூல் வெண்பா வகுத்துரைப்ப னாரையூர்ப்
பிள்ளையா ரைத்தொழுது பின். (௧)

தூயதிருத் தொண்டத் தொகைதந்து சுந்தரர்தா
மாயிருஞா லத்தோரை வாழ்வித்தா—ராயதெவன்
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. (௨)

---

(௧) 'தூண்டாவிளக்கு' என்றது சுந்தரமூர்த்திசுவாமிகளை. ([illegible]) னாரையூர்ப் பிள்ளையாரைத் தொழுது பின் வகுத்துரைப்பன் என்க.

(௨) ஆயது எவன் - அங்ஙனம் வாழ்வித்ததனா லவர்க்காகிய பயன் என்னை? கடப்பாடு-கடமை, உபகாரம். மாரி-மேகம்.

மைவைத்த கண்டர் மறைவாக்கி னாற்புகழ்ந்த
சைவத் தலைவரன்பு சாற்றவல்லான் — கைவைத்
தரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (௫)

பாயிர முற்றும்.

---

(௧) இச்செய்யுள் அவையடக்கங் கூறுதனுதலிற்று. சைவத்தலைவர்- அறுபத்துமூவராகிய. அரங்கு சூதாடுதற்கு வகுத்த அறை. வட்டாடல் - சூதாடுகருவியை யுருட்டல். கோட்டிகொளல்- அவையின்கண் ஒன்றுசொல்லுதல். 'கோட்டி' என்பது இடவாகுபெயராய்ச் சொல்லை யுணர்த்துதலின், 'கொளல்' என்பது இலக்கணையாய்ச் சொல்லுதலாயிற்று.

## நூல்.

தில்லைவாழந்தணர்.

பூவா யிரம்பேர் புகழ்கூத்த னைத்தில்லை
மூவா யிரம்பேர் முதலெனக்கொண் — டோவா
நகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (௧)

---

(௧) பூ ஆயிரம் பேர்புகழ்-பூமியின்கணுள்ளார் சகஸ்திரநாமத்தைக் கொண்டு புகழும். (பூ-இடவாகுபெயர்). 'ஆயிரந்திருநாமம்பாடி நாந்தெள்ளேணங்கொட்டாமோ' என்றருளினர் ஆளுடைய வடிகளும். இனி, பூமியின்கண் பலர் புகழும் என்பாருமுளர். 'முதலெனக்கொண்டோவார்' என்றார் வியாக்கிரபாதர்கட்டளையிட்டவாறே இரணியவன்மன் என்னும் மன்னன் பிரமனது யாகசாலையையடைந்து அவன் அநுமதிபெற்று ஆண்டிருந்த மூவாயிரம் பிரமருஷிகளையும் மூவாயிரந் தேர்களின் மீதேற்றிவந்து திருத்தில்லை நண்ணி எண்ணிப் பார்த்தபோது ஒருதேர் குறையக்கண்டு மனவருத்த மிகக்கொண்டு நின்றவளவின் மன்றவாணர், 'அன்ப! வருத்தமொழிக. இம்மூவாயிரவருள் யானும் ஒருவன். என்னையும் உடன்கூட்டி யெண்ணுக' வென்று பணித்தமையின். ஓவார்-நீங்கார்.

திருநீலகண்டநாயனார்.

ஆலகண்ட ராணைகொண்டில் லாளெதிர்செல் லாறுதிரு
நீலகண்ட னைம்பொறிமா நீக்கினார்—மேலா
முரனென்னுந் தோட்டியா னைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. (௨)

இயற்பகைநாயனார்.

மயற்பகையுள் ளுள்ளுவப்ப மாதவர்க்கில் லாளை
யியற்பகையி கழ்ந்தெள்ளா தீந்தான்—செயற்பா
லிகழ்ந்தெள்ளா தீவானைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. (௩)

இளையான்குடிமாறநாயனார்.

உய்வித் தவனடியார்க் கோரிருளிற் போய்மாறன்
செய்வித்தும் வாரியனஞ் செய்தானே—மெய்வருந்தி
வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம், (௪)

---

(௨) மா-யானை. தோட்டி-அங்குசம். உரன்-திண்மை; ஈண்டு அறிவின் திண்மை. வரன் என்னும் வைப்பு-எல்லா நிலத்தினுமிக்க தென்று சொல்லப்படும் வீட்டுநிலம்.

(௩) மயற்பகை (யாகிற) மாதவர்க்கு உள்ளுள் உவப்ப இகழ்ந்து எள்ளாது இல்லாளை ஈந்தான்' என்கூட்டுக. மயற்பகை-(மெய்ப்பொருளல்லனவற்றை மெய்ப்பொருளென் றுணரும்) மருட்குப்பகை.

(௪) உய்வித்தவன்-சிவபெருமான். மாறன்-இளையான் குடிமாறநாயனார். மாறன்-(காமக்குரோதாதிகட்குப்)பகைவன். செய்-வயல். அனம்-அன்னம், சோறு. மிச்சில்-மிகுதி. மிசைவான்-உண்பான.

### மெய்ப்பொருணாயனார்.

பொய்ப்பொருண்மாற் றன்புரிந்த பொய்த்தவவே டம்பொருளாய்
மெய்ப்பொருளார் கண்ட விதந்தானே—மெய்ப்பொரு
ளொப்பொரு ளாத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (௫)

### விறன்மிண்டநாயனார்

அறன்மண்டு சுந்தரனை யாரூ ரரனை
விறன்மிண்டர் தாமே வெகுண்டார்—மறமன்
றுறுஅ தவர்போற் சொலினுஞ் செறுஅர்சொ
லொல்லை யுணரப் படும். (௬)

### அமர்நீதிநாயனார்.

நிரம்புபொருள் சேயொடமர் நீதிமனை யாளோ
டரன்கோ வணத்தட் டதனே—ரிருந்தார்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. (௭)

---

(௫) பொருளாய்-மெய்த்தவவேடமாய்.

(௬) அறன்-அறம். மண்டு-நெருங்கும். சுந்தரனையாரூரரனை-சுந்தரமூர்த்திசுவாமிகளையும் வீதிவிடங்கப்பெருமானையும். மறம் அன்று-(இங்ஙனம் வெகுண்டமை) அதருமம் ஆகாது. உறுஅ தவர்-நொதுமலர், பகையு நட்புமில்லார். செறுஅர்-பகையாதார். ஒல்லை-கடிது.

(௭) கோவணத்தட்டு - இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்றொக்கதொகை. சமன்செய்து – சமனாகநின்று. கோல்-துலாம். கோடாமை-வளையாமை.

சுந்தரமூர்த்திநாயனார்.

அளந்தருள்செம் பொன்மணிமுத் தாற்றிலிட் டாரூர்க்
குளந்தனிலே கண்டெடுத்துக் கொண்டா—ருளைந்து
பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம. (௮)

எறிபத்தநாயனார்.

பத்தர்பூ வளி பறித்தகரி பாகனைக்கொன்
றித்தலமேவந் தஞ்ச வெறிபத்தர்—கைத்தார்
குணமென் னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது. (௯)

ஏனாதிநாதநாயனார்.

தானாக வெல்லாதான் றன்னுதல்வி பூதியைக்கண்
டேனாதி நாத ரிகலிழந்தா—ரானாத
சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். (௰)

---

(௮) பரியினும்-வருந்திக் காப்பாற்றினும். பால்-ஊழ். தம-(ஊழாற்) றமவாய பொருள்கள்.

(௯) பத்தர்-சிவகாமியாண்டார். பூவளி-திருப்பூக்கூடை. கரிபாகனை-யானையையும் பாகனையும். கைத்தார்-வெகுண்டார்.

(௰) ஆனாத-கெடாத. சால்பு-நிறை, அமைதி. கட்டளை-உரைகல். துலையல்லார்-ஒப்பாகாதார், இழிந்தார். தோல்விகொள்ளுதலாவது வெல்லுமாற்றலுடையராயிருந்தே ஏற்றுக்கொள்ளுதல். தோல்விகொள்ளுதலைக் கட்டளையாக வுருவகஞ்செய்து சால்பினைப் பொன்னாக வுருவகஞ் செய்யாமையின் இஃதேக தேசவுருவகம்.

கண்ணப்பநாயனார்.

புண்ணப்பர் கண்ணிலென்று புண்கூறுமப் பிடந்தப்பிக்
கண்ணப்ப னன்புறப்பிற் கைசெய்தார்—வண்ணப்
புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு (௰௧)

குங்கிலியக்கலயநாயனார்.

தலைபண்பி னல்வளைந்தார் தம்மைநிமிர்த் திட்டான்
நிலைபண்பின் நாணிடுக்கங் காணான்—பலவின்
படுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து. (௰௨)

மானக்கஞ்சாறநாயனார்.

பஞ்சவடிக் கென்றுசிவ பத்தர்க் குவப்பமணம்
அஞ்சுசுதைமென் கூந்தலரிந் தன்றீந்தார்—கஞ்சாற
ரீத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (௰௩)

---

(௰௧) 'அப்பர் கண்ணில் புண் என்று' என்றிரட்டுக. அப்பர்-காளத்தியப்பர். கைசெய்தார்-அலங்கரித்தார்.

(௰௨) வளைந்தார் - திருப்பனந்தாளீசர். இடுக்கம் - துன்பம். பகடு-(பாண்டிலிழுக்கும்) கடா.

(௰௩) பஞ்சவடம்-விரித்தவடம். இது மயிர்ப்பூணுநூல்; மாவிரதசமயத்தார்க்குரியது. மணம்-கல்யாணம். சுதை-மகள். ஈத்து உவக்கும் இன்பம் - வறியார்க்கு வேண்டுவன கொடுத்து அவர் உவத்தலான் அருளுடையார்தாம் எய்தும் இன்பம். வன்கணவர்-அருளிலாதார்.

அரிவாட்டாயநாயனார்

போயகமர் மாவடுவும் புண்ணியர்வா யிற்கொளாவே
தாயர்களத் தூறுவடுத் தான்கொண்டார்—வீயாரோ
சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை. (௧௪)

ஆனாயநாயனார்.

ஆனாயர் வேயிசையி லஞ்செழுத்தே யஞ்செவிச்செந்
தேனூற பரனுக்குத் திக்களித்தார்—கானிற்
பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல். (௧௫)

குந்தபூர்த்திநாயனார்.

ஆகிலிலா ரூபர்க் கமுதாக்க வேபரவை
வீரியெல்லா நெல்லாய் விளைந்ததே—தீதியா
வில்லதிக னில்லவள் மாண்பானா லுள்ளதே
னில்லவன் மாறனுக் கடை, (௧௬)

---

(௧௪) கமர்-வெடிப்பு. மாவடு—மாம்பிஞ்சு. புண்ணியர்-சிவபெருமான். தாயர்-அரிவாட்டாயநாயனார். களம்-கழுத்து. ஊறு-இரணம். வடு-தழும்பு. வீயாரோ- (சிவபெருமான் தடாதிருப்பிற்) சாதலுஞ் செய்வரென்றபடி. இன்னாதது-துன்பஞ்செய்வது.

(௧௫) அஞ்செழுத்தாகிற பொருளையும், வேய்ங்குழலாகிற கருவியையும், அந்தியாகிற காலத்தையும், அஞ்செவித்தேனையளித்தலாகிற வினையையும், கானாகிற இடத்தையும் எண்ணிச்செய்தாரென்க. கான்-முல்லைநிலம். இருள்தீர-மயக்கம் அற. செயல்-செய்க (இஃது அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள்).

(௧௬) இல்லவள்-மனைவி.

மூர்த்திநாயனார்.

சேர்த்திமுழங் கையெலும்புந் தேயச்செஞ் சந்தனமா
மூர்த்திமது ரேசருக்கு முன்பரைத்தார்—பார்த்தீரோ
வன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு. (௰௭)

முருகநாயனார்.

மட்டார்தார் கண்ணி வகைசிவபூ சைக்கொருநாண்
முட்டாது செய்தார் முருகனார்—விட்டாரோ
வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். (௰௮)

உருத்திரபசுபதிநாயனார்.

உருத்திரமே சொல்லி யுதகத்துள் ளேநின்
றருத்ர பசுபதியா ருற்றார்—திருத்தாள்
தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு. (௰௯)

---

(௰௮) மட்டு-தேன். தார்-அடையாளப்பூ. கண்ணி சூடும்பூ. தொல்-மரபு: ௯௫-வது சூத்: 'கண்ணியுந்தாருமெண்ணினராண்டே'. முட்டாது-தவறாது. வீழ்நாள்-(செய்யாது) கழியும்நாள். வாழ்நாள்வழி-யாக்கையொடுகூடும் நாள் வரும்வழியை. அஃதொருவன் வாழ்நாள் வழியடைக்குங் கல்-அஃதொருவற்கு வீடு பயக்குமென்றபடி.

(௰௯) உருத்திரம்-உருத்திரமந்திரம். உதகம்-நீர். திருத்தாள்-திருவடியை. அவம்-(தமக்குக்) கேடு.

### திருநாளைப்போவார்நாயனார்.

மூவா யிரமறையோர் மொய்ப்பத் திருநாளைப்
போவார் சிதம்பரத்துட் போயடைந்தார்—ஓவாப்
பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். (௨௰)

### திருக்குறிப்புத்தொண்டநாயனார்.

தொண்டர் குறிப்பறிந்த தொண்டர் திருக்குறிப்புத்
தொண்டனைத் தங்கந்தைதந்து சோதியராட்—கொண்டார்
குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். (௨௧)

### சண்டேசுரநாயனார்.

அறஞ்செய்த தாதைதா ளற்றிடச்சண் டேசர்
மறஞ்செய்கொலை புண்ணியமாய் வாழ்ந்தார்—திறந்தெரியி
னல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு. (௨௨.)

### சுந்தரமூர்த்திநாயனார்.

ஓவாப் பரவைக் குமாபதியைத் தூதாக்கித்
தீராப் புலவியையுந் தீர்த்தாரே—யாரூர
ருப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். (௨௩.)

---

(௨௰) கட்டளைக்கல்-உரைகல்.

(௨௧) உறுப்புக்களாவன பொருளும் நாடும் யானை குதிரைகளும் முதலிய புறத்துறுப்புக்கள்.

(௨௩) புலவி-பிணக்கு. அது-அவ்வுப்பு. நீளவிடல்-அளவறிந்துணராமற் புணர்ச்சி மேலெழுந்த குறிப்பு அழுங்குமளவுஞ்செய்தல்.

## திருநாவுக்கரசுநாயனார்.

துறைசேர் சமணிங்கிச் சைவஞ்சேர் நாவுக்
கரைசர் வயிற்றுவலி யற்று—றுறைசேர்ந்த
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். (உச)

நீற்றறைநஞ் சானைகட னேருற்றா ரப்பார்க்கு
மாற்றமணர் பின்னிருந்து வாழ்த்தாரோ—வாற்றரிய
நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். (உரு)

மருணீக்கி யார்தரும சேனருமாய் நாவுக்
கரசரப்ப ராகியின்ப மானா—ரருளா
லிருணீங்கி யின்பம் பயக்கு மருணீக்கி
மாசறு காட்சி யவர்க்கு (உசு)

---

(உச) சமண்-ஜைனசமயர். அரைசர்-அரசத்திற்கு ஐகாரப்போலி. சார்புணர்ந்து-மெய்ச்சார்புணர்ந்து. சார்புகெட-பொய்ச்சார்புகள் கெட. சார்தரா-வந்தடையா.

(உரு) நேருற்றார்-உடன்பட்டார். மாறு-பகை. நீற்றறையுளிருத்தினமையையும், நஞ்சூட்டினமையையும், பட்டயானையை விட்டமையையும், கடலிற் பாய்ச்சினமையையும் முறையே வைத்து 'நீற்றறை நஞ்சானை கடனேருற்றார்' என்றார்.

(உசு) மருணீக்கியார் முதலிய நான்கும் முறையே நாமகரணஞ்செய்த பெரியோரும், ஜைனரும், திருவதிகை வீரட்டானேசுவரரும், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் இட்டனவென்றறிக. இருள்-பிறப்பு (இதுகாரியவாகுபெயர்). 'நீக்கி' என்பது 'நீங்கி' எனத் தொடைநோக்கி மெலிந்து நின்றது. மருள்-அவிச்சை. மாசறுகாட்சி—மெய்யுணர்வு.

விண்களிப்பக் காணு வியன்கயிலை வாழ்வையப்பர்
கண்களிப்ப வையாற்றிற் கண்டுவந்தா—ரெண்களிப்பக்
கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். (௨௭)

மாமணிபொன் மாதரெதிர் வந்துறினும் பற்றற்றார்
தாமரன்பால் வந்தரசர் தாழ்த்தாரோ—வாமெனவே
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும். (௨௮)

குலச்சிறைநாயனார்.

நலச்சிறைநீர் வேணியபர் நல்லடியார் யார்க்குங்
குலச்சிறையார் தாம்பணிதல் குன்றா—ரிலர்க்கிகழா
ரெல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. (௨௯)

---

(௨௭) விண்-விண்ணோரும். உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஐயாற்றில்—பஞ்சநதக்ஷேத்திரத்தில்.

(௨௮) மாமணி-அழகிய நவமணிகள். அரன்பால்வந்து - திருப்புகலூரீசன்பால் வந்து. தாழ்த்தாரோ-தாமதித்திலர்; உடனேபிறப்பறுத்தா ரென்றபடி. ஓகாரம் - எதிர்மறை. ஆமெனவே-நன்மைபயக்குமெனவே. மற்று-வினைமாற்று. மற்று நிலையாமை காணப்படும்- அப்பற்றறாதபோது (பிறந்திறந்துவருகின்ற) நிலையாமை காணப்படும்.

(௨௯) நலம்-அழகு. சிறை - கரை. நீர் - கங்கை. வேணி-சடை. இலர்க்கு இகழார்- (குணமுதலியன) அற்றாரையும்பழியார். (இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது). இலர்க்கு-வேற்றுமைமயக்கம். ஏகாரம் பிரிநிலை. செல்வம்-வேறொருசெல்வமாம். தகைத்து-சிறப்பினையுடைத்து.

பெருமிழலைக்குறும்பநாயனார்.

நாவலர்கோ மான்கயிலை நாளைப்போ மென்றுமுன்போய்
மேவிமிழ லைக்குறும்பர் வீற்றிருந்தார்—யாவருக்கு
மின்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. (௩௰)

காரைக்காலம்மையார்.

என்புருவா லம்மையெள்ள வீசர்மகிழ் கம்மையென்னு
மன்புருவாள் காரைக்கா லம்மைகாண்—முன்பே
யுருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. (௩௧)

அப்பூதியடிகணாயனார்.

அரசினையப் பூதி யடிகளறி வாரோ
யுரைசெயுணர் வாலுறநட் புற்றார்—மருவிப்
புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும். (௩௨)

---

(௩௰) இன்னாது-துன்பத்தைத்தருவது.

(௩௧) அம்மை எள்ள-உமாதேவியார் இகழ; அன்றி, 'வாலம்மை' யெனப்பிரித்து 'வாலையாகிற உமாதேவியார்' எனப்பொருள் கூறி அதற்குத்தக இலக்கண முறைத்துக்கொடலுமொன்று. காண்-அசைநிலை. உருள்-உருளாநின்ற. அச்சாணி - அச்சின் கண் ஆணி.

(௩௨) புணர்ச்சி பழகுதல் - இஃதும்மைத்தொகை நிலைத்தொடர். புணர்ச்சி-ஒருதேயத்தராதல். பழகுதல்-பலகாற் கண்டேசொல்லாடியும் மருவுதல். கிழமை-உரிமை.

திருநீலநக்கநாயனார்.

நலங்கொடிரு நீலநக்கர் நாதர்மே லில்லாள்
சிலம்பிவிழ வாய்மருந்து செய்தாள்—சலங்கொளுழு
ழைய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (௩௩)

நமிநந்தியடிகணாயனார்.

நக்கமணர் வெள்கநமி நந்தியா ரூரர்க்கு
மிக்கபுன லாலே விளக்கெரித்தார் — நக்கமனத்
தெண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். (௩௪)

சுந்தரமூர்த்திநாயனார்.

ஆறாறு கட்டாரை யாறணையா வாறுபெரு
காறாறு காட்டநடந் தாரூரர்—பேறானார்
வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
ருள்ளத்தி னுள்ளக் கெடும். (௩௫)

---

(௩௩) நீலநக்கர்நாதர்-நீலநக்கர் அருச்சித்த நாதர். சலம்-வைரம். வாய்மருந்து-வாயின்கண் நீர்மருந்து; வாய்த்த மருந்துமாம். முதல்-காரணம். வாய்-உபாயம்.

(௩௪) நக்கு- (முன்) சிரித்து; வெள்க - (பின்) வெட்கமடைய. அகரம் விகாரத்தாற் றொக்கதெனக்கொண்டு 'நக்க அமணர்' எனினுமமையுமாறுகாண்க. எண்ணியாங்கு-எண்ணியவாறே. எய்துப-அடைவர். திண்ணியர்-வலியர்.

(௩௫) ஆறாறுகட்டார்-முப்பத்தாறு தத்துவங்களாலுங் கட்டப்படாதார் அஃதாவது அவற்றிற் கப்பாற்பட்டார்; பஞ்சாக்ஷரேசுவரர். 'ஆறாறையு நீத்ததன்மேனிலையே,' 'ஈறைக்கொன்றை-யாதிதனையொழிய வாறாறுதத்துவத்தின்-மீதமகிழ்ந்திருக்கும் விண்ணவரார்' என்றார் பிறரும். அணையாவாறு- அணையாதபடி. பெருகாறு - பெருக்கெடுத்த நதியானது. ஆறுகாட்ட-வழிகாட்ட. இடும்பை-துன்பம். உள்ள-நினைக்க.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வால வயதில் வளர்புகலிப் பிள்ளையார்
போல விசையம் புரிந்தவரார்—ஞாலமிசைத்
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. (௬௬)

பண்ணார் பசுந்தமிழ்ச்சம் பந்தரெதிர் வந்தமண
ரெண்ணாறு யிரங்கழுவி லேறினா—ரொண்ணாது
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. (௬௭)

முத்தமிழ்ஞா னத்தலைவர் முன்னம் பகைசாரப்
புத்தனெதிர் நின்றிடியிற் பொன்றினா—னித்திறமென்
கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல். (௬௮)

---

(௬௬) வாலவயதில்-இளமைப்பருவத்தில். புகலிப்பிள்ளையார்-திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள். விசையம்-விஜயம், வெற்றி. ஆர்-யார் என்பதன்மரூஉ. தோன்றலின்- (மக்களாய்ப்) பிறத்தலின். தோன்றாமை நன்று-(மக்களாய்ப்)பிறவாமைநன்று; விலங்காய்ப் பிறத்தல் நன்று என்றபடி.

(௬௭) வில் ஏர் உழவர்-யுத்தவீரர். சொல் ஏர் உழவர்-புலவர்.

(௬௮) முத்தமிழ்-இயல் இசை நாடகம் என்பன. முத்தமிழ் ஞானத்தலைவர்-திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள். புத்தன்-புத்தநந்தி யென்பான். கூற்றம்-யமன்; உடலையும் உயிரையும் கூறுபடுத்தலிற் கூற்றமாயினனென்க. கையால் விளித்தற்று-கைகாட்டி அழைத்தாலொக்கும். ஆற்றாதார்-வலியற்றார்.

எறியவோ டக்கோ லிசைஞானச் செந்தமிழா
லாறுகடந் தார்தோணி யார்மகனார்—விறடங்கா
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு. (௫௪)

---

(௫௪) ஓடக்கோலாகிய செந்தமிழ் என்க. 'காவலனே ரோடத்தின் கட்டவிழ்த்துக் கண்ணுதலான் றிருத்தொண்டர் தம்மையேற்றி, நாவலமே கோலாக வதன்மேனின் றுநர்பந் தமைக்கொட்டமே நவின்றுபாட' எனப்பணித்தார் சேக்கிழார்சுவாமிகளும். தோணியார் - தோணியப்பர். ஓடம் விட்டதற் கிசையக்கூற வேண்டித் 'தோணியார்மகனார்' என்றார். 'மகனார்' என்றது அருமுருகக்கடவுளே திருஞானசம்பந்தப்பிள்ளையாராகத் திருவவதாரஞ்செய்தாரென்னும் மேலோர் துணிபுபற்றி யென்க. 'மயிலேறுந் தியவள்ளா றன்னை யளிப்ப மதிபுணர்ந்த, வெயிலேந் தியசண்பைநாதனுலகத் தெதிர்ப்பவரியார்', 'காழிநாடன் கவுணியர்தலைவன், மாமறை நோக்கிமலைமகள்புதல்வன்' என நம்பியாண்டார்நம்பிகளும், 'புரமெரித்தார் திருமகனார்பூந்தருத்தி தொழுதகன்றார்,', 'சிந்தையாரமுதாகிய செஞ்சடைத், தந்தையார்கழற்றொழுந் தேசினார்' எனச் சேக்கிழார்சுவாமிகளும். 'உபயகுல தீபவங்க-விருதுகவி-ராஜசிங்க- முறைபுகலி-யூரிலன்று - வருவோனே', 'சமணரைக் - குலமுதற் - பொடிபடக்-கலகமிட்-டுடனுயர்க்- கழுவினுச் - சியினில்வைத் - திடுவோனே' என அருணகிரிநாதரும் கட்டளையிட்டமைகாண்க.

கணவனெனக் காதலியைக் காழியர்கைப் பற்றி
மணவறையி சன்கழலாய் வாழ்ந்தார்—குணமே
தலைப்பட்டார் நீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். (௪௰)

ஏயர்கோன் கலிக்காமநாயனார்.

ஈசனையாள் வாராய்வ தென்னையாள் வாரொன்று
காசினியின் மாண்டார் கலிக்காமர்—பேசின்
மருந்தோமற் றாறேனும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. (௪௧)

திருமூலநாயனார்.

பரகாயஞ் சேர்ந்தார் பசுக்களா லாய்ச்சி
மருவாமன் மாதவமே வாய்ந்தார்—திருமூல
ருறையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா தூனூற்று பவர். (௪௨)

---

(௪௰) மணவறை-திருக்கல்யாணமண்டபம். நீர-முற்ற. வலைப்பட்டார்-(பிறப்பாகிய) வலையுட்பட்டார்.

(௪௧) 'ஈசனையாள்வாராய்' என்றார் பரவைநாய்ச்சியாரிடம் ஈசனைத் தூதாக ஏவுதலின். என்னை-அன்னையோ? மாண்டார் - இறந்தார்; மாட்சிமைப்பட்டார் என்பது குறிப்பாற்பெறப்படும் பொருள். மருந்தோ-பின்னும் இறவாமைக்கு மருந்தாமோ? ஊன்-உடம்பு. பெருந்தகைமை-உயர்குடிப்பிறப்பு. பீடு-மானம்.

(௪௨) பரகாயம்-மறுகூடு. ஆய்ச்சி-(இறந்த இடையன்மனைவியாகிய) இடைச்சி. உப்பக்கங்காண்பர் - புறங்காண்பர். உலைவின்றி - இளையாது. [illegible]

தண்டியடிகணாயனார்.

அந்தகனென் றேசு மமணரந்த ராயொழியத்
தந்தமொழி சாதித்தார் தண்டியார்—முந்தமொழி
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். (௪௩)

மூர்க்கநாயனார்.

உருளாய மும்பொன் னுதவுதன்மூர்க் கர்க்கே
பொருளாய மற்றவர்க்கே போக்கு—மருளா
மறத்திறனூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. (௪௪)

சோமாசிமாறநாயனார்.

சோமாசி மாறனார் சுந்தரரால் யாகமினி
தாமா றதனை யழைப்பித்தா—ராமாம்
பொதுநோக்கான் வேந்தன் வரிசையா னோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர். (௪௫)

---

(௪௩) அந்தகன்-குருடன். அமணர்-ஜைனர். அந்தராய்-குருடராய். தந்த-சொல்லிய.

(௪௪) உருள் ஆயமும்-உருளுங்கவறும். மற்றவர்க்கே-பிறர்க்கே. பொருள் ஆயம் போக்கும்-உள்ள பொருளையும் மேற்பொருள் வருவாயையும் அழிக்கும்.

(௪௫) சோமாசி-'ஸோமயாஜி' என்னும்வடமொழிப்பெயர்ச்சிதைவு. இனிதாமாறு-இனிதாகும்படி. வரிசையா-தகுதிக்கேற்ப.

சுந்தரமூர்த்திநாயனர்.

பொருட்டுறையுன் பாட்டேறப் பூசையென்றா ரூரர்க்
கருட்டுறையா ரன்புசெய்வா ரானார்—மருட்டேர்
செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். (௬௬)

சாக்கியநாயனர்.

அங்கசன்பூ வெல்லா மடுகணையே சாக்கியர்கைச்
செங்கலெல்லாஞ் சங்கரர்க்குத் தேமலரே—செங்கேழ்க்
கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். (௬௭)

---

(௬௬) பொருள்-அகப்பொருளும் புறப்பொருளும். அகப்பொருளாவது இன்பம்; புறப்பொருளாவன அறமும் பொருளும். துறை-மக்களும் மாவும் முதலியன சென்று நீருண்ணுந்துறை போலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதற்கு மார்க்கமாமாதலின் இப்பெயர்த்தாயிற்று. ஆரூரர்க்கு-சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு. அருட்டுறை - திருவெண்ணெய் நல்லூராலயம். "அர்ச்சனைபாட்டேயாகு மாதலான் மண்மே னம்மைச், சொற்றமிழ் பாடுகென்றார் தூமறைபாடும்வாயார்" என்னும் பெரியபுராணச்செய்யுளை நோக்குக. மருட்டேர்-மயக்கத்தினீங்கித்தெளிந்த. செவிக்குணவு-கேள்வி. வயிற்றிற்கிடுதல் பெரிதாயவழித் தேடற்றுன்பமேயன்றி நோயும் காமமும்பெருகுதலாற் 'சிறிது' என்றார்.

(௬௭) அங்கசன்-மன்மதன். அடுகணை-கொல்லும் அம்பு. "ஈசற்கு, நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு-வில்லோன் மலரோ விருப்பு." என்றார் பிறரும். கணைகொடிது-அம்பு (வடிவாற் செவ்விதாயினும் செயலாற்) கொடிது. யாழ்கோடு செவ்விது-யாழ்தண்டால் வளைந்ததாயினும் (செயலாற்) செவ்விது. வினைபடுபாலால்-செயல்பட்ட பகுப்பினால். கொளல்-கொள்க.

சிறப்புலிநாயனார்.

எய்தமகிழ்ந் தின்சொ லுரைத் தீசனடி யார்க்கிதமே
செய்தனமே செய்தார் சிறப்புலியார்—வெய்துற்றார்
மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. (௪௮)

சிறுத்தொண்டநாயனார்.

காய்க்கறிவே றென்றுதொடாக் கள்ள வயிரவர்க்கோர்
சேய்க்கறிசெய் திட்டார் சிறுத்தொண்டர்—வாய்க்கினிதா
யின்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு. (௪௯)

சேரமான்பெருமானாயனார்.

நெறிவார் சடையரைப்போ னீணிலத்தோர் செய்கை
யறிவார் கழறிற் றறிவா—ரறிவாரா
ரெல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். (௫௰)

---

(௪௮) இதமே செய்து- இன்பமேபுரிந்து. அனம் - அன்னம்; திருவமுது. வெய்துற்றார்-வெம்மையாகிறவயிர்ப்புடையார். மோப்பக்குழையும் அனிச்சம்-மோந்தாலன்றிக்குழையாது அனிச்சப்பூ. திரிந்து-வேறுபட்டு. விருந்து-விருந்தினர்.

(௪௯) சேய்க்கறி-குழந்தைக்கறி. "வாய்க்கினிதாய்ச் செய்திட்டார்" என்றொட்டுக. இன்னாது - இன்பஞ்செய்வதன்று. இரக்கப்படுதல்-இரப்பார்க்குக் கொடுப்பேனென்றிருத்தலும் (இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது). காணுமளவு-காணுமளவும் (முற்றும்மை விகாரத்தாற்றொக்கது).

(௫௰) நெறி-நெறித்த. வார்-நீண்ட. நெறிவார்சடையர்-சிவபெருமான். வல்லறிதல்-விரைந்தறிதல்.

சேரர்கோ னீதித் திரவியங்கள் சுந்தரர்பாற்
சோரர் கவர்ந்தொளித்துஞ் சோர்வுண்டோ—பாரி
லெழுக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை. (ருக)

கணநாதநாயனார்.

நாட்டி லடி யாரையெல்லா நாதன் பணிவிடையே
காட்டிவாழ் வித்தார் கணநாதர்—வேட்டிவர்தாஞ்
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. (ருஉ)

கூற்றுவநாயனார்.

ஆற்றரிதா மீச னடிமுடியா கப்புனைந்து
போற்றி மனக்கவலை போக்கினார்—கூற்றர்
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது. (ருங)

---

(ருக) சேரர்கோன்-சேரமான்பெருமாணயனார். பிற்பயக்கும்-பின்வார்வந்து பயன்கொடுக்கும். நற்பாலவை- தூயவினையான்வந்தபொருள்கள்.

(ருஉ) செய்யாமல்- (தனக்கு முன்னேருதவியுஞ்) செய்யாதிருக்க. மாற்றல்-கைம்மாறுகக்கொடுத்தாலும் ஒத்தல்.

(ருங) ஆற்றரிதாம்-தாங்கற்கரிதாகிய. மாற்றல்-நீக்குதல். அரிது-உண்டாகாது.

சுந்தரமூர்த்திநாயனார்.

ஆரூர ரிசனைத்து தாக்கியநாட் கூன்குருடு
தாமோடு தாம்பூலந் தாங்கவினை—நீர்வார்
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (௫௪)

பொய்யடிமையில்லாதபுலவர்.

மதுரையிலே மேழ்புலவர் வல்லசிவன் பாத
மதுபொருளா கக்கவிசெய் தாரே—புதுமையோ
கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின். (௫௫)

(௫௪) "கூற்றுக்கெவனோ புகுதிருவாரூரன் பொன்முடிமே- லேற்று த்தொடையலு மின்னடைக்காயு மிடுசருமக் - சோற்றெருத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை-சாற்றித்திரியும் பழமொழியாமித் தரணியிலே." என நம்பியாண்டார்நம்பிகளும், "தேனுங்குழலும்பிழைத்ததிரு மொழியாள்புலவி தீர்க்கமதி- தானும்பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந் திருநாட்-கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவுமலர்ப் பாதம்-யானும்பரவித் தீர்க்கின்றே னேழுபிறப்பின் முடங்கு கூன்" எனச்சேக்கிழார்சுவாமிகளும் பணித்தமைகாண்க. தார்-மாலை. நிறைமொழி-அருளிக் கூறினும் வெகுண்டுகூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடுமொழி. மறைமொழி- மந்திரங்களை (புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச்சொல்லுஞ் சொற்றொடர் மந்திரமென்பர் நச்சினார்க்கினியர்). "நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த - மறைமொழிதானே மந்திர மென்ப" என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

(௫௫) எழேழ்புலவர்-நாற்பத்தொன்பது சங்கப்புலவர். வாலறிவன்-மெய்யுணர்வினையுடையவனது.

புகழ்ச்சோழநாயனார்.

தங்களத்தில் வீழ்ந்த சடைத்தலைகண் டஞ்சியஞ்சிப்
பொங்கழற்குள் வீழ்ந்தார் புகழ்ச்சோழ—ரெங்குமறுத்
தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். (௫௬)

நரசிங்கமுனையரையநாயனார்.

மூரிநர சிங்க முனையரையர் மாதவருட்
சீரியதூர்த் தர்க்கிரட்டி செய்தாராம்—பூரிதா
னற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். (௫௭)

அதிபத்தநாயனார்.

மேனாட்செல் வங்கெடினு மீன்வலைவீ சிக்கோரொண்
மீனானும் விட்டா ரதிபத்த—ராறு
றிடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். (௫௮)

---

(௫௬) களத்தில்-போர்க்களத்தில். அழற்குள்-தீயினுள்.

(௫௭) மூரி- வலிய. தூர்த்தர்க்கு-காமுகர்க்கு. "பூரி இரட்டிசெய்தாராம்" என்றொட்டுக. பூரி-பொன். அற்றம்-அவமானம் (இது கருவியாகுபெயர்).

(௫௮) மீன்வலை வீசிக்கு-சிவபெருமானுக்கு. சுந்தரேசப்பெருமான் வலைவீசின சரித்திரத்தைத் திருவிளையாடற்புராணம் வலைவீசின படலத்திற்காண்க. இடன்-செல்வம். ஒப்புரவு-உபகாரம். ஒல்கார்-தளரார். காட்சியவர்- இயற்கையறிவுடையார்.

கலிக்கம்பநாயனர்.

மெய்யடியார் தாளில்லாள் வெள்கக் கழுவிவாள்
கையடியக் கீர்ந்தார் கலிக்கம்பர்—பொய்யடிக்கொண்
டில்லானை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல். (ருக)

கலியநாயனர்.

எள்ளா விளக்கரன்பா லேற்றவே வாள்கலியர்
கொள்ளாரே லேதுங்கொ டாருலகி—லுள்ளார்கொ
னல்லார்கட் பட்ட வறுமையி னின்றுதே
கல்லார்கட் பட்ட திரு. (ருஉ)

சத்திநாயனர்.

அண்ணலடி யாரையிகழ்ந் தார்நாவி லாழாதே
தண்ணளியா லுத்தறித்தார் சத்தியா—ரெண்ணுமுற
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (ருக)

---

(ருக) இல்லாள் -மனைவி. நல்லசெயல் - (நல்லார்) விரும்புவன கொடுத்தல்.

(ருஉ) வாள்- வாட்படையை. கொள்ளாரேல் - கொள்ளாராயின். ஏதுங்கொடார் - (அவ்வரன்) ஒன்றுங்கொடார். உள்ளார் கொல்-நினையாரோ? வறுமையின்-வறுமையினும் (இழிவுசிறப் பும்மை விகாரத்தாற்றொக்கது).

(ருக) தண்ணளியால்-மிக்கவருளான். யா-எல்லாவற்றையும் (முற்று ம்மை விகாரத்தாற்றொக்கது). சோகாப்பர்-துன்புறுவர்.

ஐயடிகள்காடவர்கோனாயனார்.

நாடலரு நற்பதிக ளெண்ணரிநல் வெண்பாவாய்த்
தாடலர னுக்களித்தா ரையடிகள் — காடவர்கோன்
றாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். (௬௨)

சுந்தரமூர்த்திநாயனார்.

நீரூர் முதலையது முன்னுண்ட பிள்ளையைப்பின்
னூரூரர் பாவா லழைப்பித்தார் — பாரூர்
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். (௬௩)

கணம்புல்லநாயனார்.

கணம்புல்லர் நெய்வாங்கக் காணார் கணம்பு
லிணங்குதலை நெய்விளக்கொன் றிட்டார் — வணங்கரன்பாற்
றுன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை. (௬௪)

---

(௬௨) தாமின்புறுவது-தாமின்புறுதற்கேதுவாகிய கல்விக்கு.
காமுறுவர்-பின்னும் அதனையே விரும்புவர்.

(௬௩) முதலையது- "அது" பகுதிப்பொருள்விகுதி. பிறப்பு-பிறப்பியல்பு (வினைவயத்தாற் பஞ்சபூத பரிணாமமாகிய யாக்கையைப்பொருந்தி நின்று அதன்பயன் அநுபவித்தல்). சிறப்பு-சிறப்பியல்புகள் (அவையாவன பெருமையுஞ் சிறுமையும்).

(௬௪) துணிவாற்றிச்செய்க-வலிமையுடையராய்ச்செய்க.

காரிநாயனர்.

பாரின்மூ வேந்தர் பரிசிலுத வப்பாடிக்
காரியா ராலயங்கள் கட்டினு—ரோரிடமோ
யாதானு நாடாமா லூராமா லென்றொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. (சுரு)

நெடுமாறநாயனர்.

பழுதறுசம் பந்தரெதிர் பாழமணர் தாழ
வழுவறநெல் வேலிவென்ற மாறன்—கழுவிட்டா
னந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். (சுசு)

வாயிலார்நாயனர்.

ஆயறிவு தீப மகமலரன் பேயமுதங்
கோயிலிறைக் கோர்மனமாய்க் கொண்டுவந்தார்—வாயிலா
ரோர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. (சுஎ)

---

(சுரு) மூவேந்தர்-சேர சோழ பாண்டியர். என்-என்கருதி? உயிரோடு செல்லுதலின் "சாந்துணையும்" என்றார். பிறநாடுகளும் ஊர்களும் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்துசெய்தற்கேதுவாகலிற் கல்விபோலச்சிறந்தது பிறிதில்லை, அதனையே எப்பொழுதுஞ் செய்க வென்பதாம்.

(சுசு) நெல்வேலி-திருநெல்வேலி. மாறன்-பாண்டியன். அந்தணர் நூல்-வேதம். அறம் - அதனுற்சொல்லப்பட்ட அறம். ஆதியாய் நின்றது-காரணமாய் நிலைபெற்றது. கோல்-செங்கோல்.

(சுஎ) ஆய்-ஆராயும். தீபம்-திருவிளக்கு. "இறைக்கு ஓர்மனம் கோயிலாய்" என்றெட்டுக. உவந்தார்-இன்புற்றார். ஓர்த்து-ஆராய்ந்து. உள்ளது-முதற்பொருளை. "ஒருதலையாவோர்த்து" என இயையும். பேர்த்துள்ள வேண்டாபிறப்பு - (அவனுக்கு) மாறிப்பிறப்புளதாக நினைக்கவேண்டா.

முனையடுவார்நாயனார்.

வினையடுவார் வந்தடுக்க வென்றுகொண்ட கூலி
தனையடுவார் சைவர் தமக்கே—முனையடுவார்
தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. (சுஅ)

சுந்தரமூர்த்திநாயனார்.

தென்புகலூ ரீசனையுஞ் சென்றுபணிந் தாரூரர்
பொன்புகலாப் பெற்றார் புகழ்பெற்று—ரின்புற்று
ரொண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. (சுகூ)

கழற்சிங்கநாயனார்.

தொழுச்சங் கரன்சூடாத் தூய்மலர்மோந் தாள்கை
விழச்சென் றரிந்து விடுத்தார்—கழற்சிங்க
ரோர்ந்துகண் ேடா திறைபுரிந்தி யார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. (எ0)

---

(சுஅ) வினையடுவார்-(இரு) வினையை அழிப்பார். அடுவார்-சமைப்பார். தாள்-முயற்சி. வேளாண்மை-உபகாரம்.

(சுகூ) ஒண்பொருள்-நெறியான்வரும் பொருள். காழ்ப்ப இயற்றியார்க்கு- மிகப்படைத்தார்க்கு. எண்பொருள் - எளியபொருளாம். ஏனை இரண்டும்-மற்றை அறனும் இன்பமும்.

(எ0) சூடா-சூடாத. இறைபுரிந்து-நடுவுநிலைமையைப் பொருந்தி. தேர்ந்து-நூலாரோடும் ஆராய்ந்து.

இடங்கழிநாயனார்.

நடங்கழியா னன்பர்க்கே நற்பொருள்க ளெல்லா
மிடங்கழியா னன்பினெடுத் தீந்தார்—முடங்கா
வருளொன் றுமன்பின் குழவி பொருளென் னுஞ்
செல்வச் செவிலியா னுண்டு. (௭௧)

செருத்துணைநாயனார்.

கருத்தனணி பூவைக் கழற்சிங்கன் றேவி
யருத்தியின்மோந் தாண்மூக் கரிந்தார்—செருத்துணையார்
வாளொடென் வன்கண்ணா ரல்லார்க்கு நூலொடெ
னுண்ணவை யஞ்சு பவர்க்கு. (௭௨)

புகழ்த்துணைநாயனார்.

வற்கடம்வந் தூண்போய்மெய் வாடியபு கழ்த்துணைகை
நற்கலசம் வீழவா னார்கொடுத்தார்—பொற்காசு
தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (௭௩)

---

(௭௧) நடம்கழியார்-நர்த்தனம் நீங்காதார், சபாநாதர். செவிலி-வளர்த்ததாய்.

(௭௨) கருத்தன்-சிவபெருமான். அருத்தி-ஆசை. வாளொடென்-வாளொடு என்ன இயைபுண்டு? ஓரியைபு மில்லையென்றபடி. அவை-சபை.

(௭௩) வற்கடம்-பஞ்சம். ஊண்-உணவு. தெய்வத்தா னாகாதெ னினும்-[முயன்றவினை] விதிவசையாற் [கருதியபயனைத்] தாராதாயினும்.

கோட்புலிநாயனார்.

பொலிகிளைகொன் றார்கோட் புலியார் விரையாக்
கலிகடந்த குற்றங் கடிந்தா—ருலகிற்
குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். (எச)

சுந்தரமூர்த்திநாயனார்.

மாவணங்கைக் கொண்டிடுமுன் வந்தரனூர் சுந்தரர்க்கோ
ராவணங்கைக் கொண்டுமறித் தாட்கொண்டார்—நோவ
வழக்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். (எரு)

பத்தராய்ப்பணிவார்கள்.

வாய்ப்பவரனைத்தொழுது வாய்குழறிக் கண்ணருவி
தோய்ப்பவுடல் கிப்புளகித் தோர்பத்த—ராய்ப்பணிவா
ரன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. (எசு)

---

(எச) விரையாக்கலி-இது சிவபெருமானைச் குறித்துக்கூறுவதோ ராணை. "பொய்தீர் - விரையாக்கலியெனு மாணையும்" எனப் பட்டினத்தடிகள் தமது கோயினான்மணிமாலையுட் டிருவாய் மலர்ந்தமைகாண்க. புறங்காத்து - பிறர்நலியாமற்காத்து குற்றங்கடிதல்-குற்றத்தையொழிக்கத் தண்டித்தல். வடு-பழி.

(எரு) அணங்கை-பெண்ணை. ஆவணம்-உரிமைப்பத்திரம். மறித்து-தடுத்து. இடித்து-நெருக்கி.

(எசு) வழியது-பின்னின்றவுடம்பே. உயிர்நிலை - உயிர்நின்றவுடம் பாவது.

பரமனையேபாடுவார்.

பரமனையே பாடுவார் பாடும் புகழா
லிருவினையுஞ் சேரா ரிவரே—மருளா
மிருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு (எஎ)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

அத்தனடி யல்லா லறம்பொருளின் பங்களிலே
சித்தமலை யார்சித்தத் தைச்சிவன்பால்—வைத்தார்தாம்
பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (எஅ)

---

(எஎ) "இருவினையும்" என்றார் நல்வினையும் பிறவிக்கேதுவாகலின். "புண்ணியமேனோக்குவிக்கும் பாவங்கீனூக்கும் புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே - நண்ணியஞா னத்தாலிரண்டினையுமறுத்தே," "இருப்புவலியை யகன்றுபொன் வல்லியையெண்ணுதலாம் - விருப்புவலியை மூலையாரணங்கினர் விண்ணுறுதல்" என்றார் பெரியோர்.

(எஅ) திருவடியே வீடாயிருக்குமென்பார் "அத்தனடி யல்லாதறம் பொருளின் பங்களிலே" என்றார். "தாட்டாமரைகாட்டித் தன்கருணைத்தேன்காட்டி" என மாணிக்கவாசகசுவாமிகளும், "சேவடிபடருஞ் செம்மலுள்ளமொடு, நலம்புரிகொள்கைப் புலம்பிரிந்துறையும்" என நக்கீரதேவநாயனாரும்பணித்தமை காண்க. சித்தமலையார்-மனம்தடுமாறார். பற்றற்றான் பற்றினை-பற்றற்ற இறைவன் ஓதியவீட்டுநெறியை.

திருவாரூர்ப்பிறந்தார்.

மன்னுதிரு வாரூர் மதில்வட்டத் துப்பிறந்தா
ருன்னு சிவகணத்தி னுற்றுயர்ந்தா—ரின்னே
நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். (எகூ)

முப்போதுந்திருமேனிதீண்டுவார்.

கருமேனி யன்பாற் கழிஇமுப் போதுந்
திருமேனி தீண்டுவார் சீர்வாழ்—வொருவா
பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். (அ௰)

முழுநீறுபூசியமுனிவர்.

அழுதி சனைநினைந்தே யஞ்சுபதஞ் சொல்லி
முழுநீ றணிவார்தா முட்டார்—பழுதறினு
மொல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். (அக)

---

(எகூ) உற்று-பொருந்தி. கிடந்தமை-உள்ளபடி. நிலத்திற்கிடந்தமை-நிலத்தினியல்பை. கால்-[அதன்கண் முளைத்த] முளை.

(அ௰) ஐந்து-ஐந்து அவா. ஐந்தவித்தான் பொய்தீரொழுக்கநெறி-ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமெய்யான ஆகமநெறியின்கண்.

(அக) அஞ்சுபதம் - பஞ்சாக்கரம். "அந்தியுநண்பகலு மஞ்சுபதஞ் சொல்லி" என்னும் ஆளுடையநம்பிகள் அமுதவாக்கானும், "ஐந்தெழுத்து மொரு சார்மொழிகளைந்தெனவுமாம்" என்னுந் தணிகைப்புராணம் வீரட்டகாசப்படலச் செய்யுளானுமறிக. முட்டார்-தடைபடார். ஒல்லும்-கூடும். ஓவாதே-ஒழியாதே.

அப்பாலுமடிச்சார்ந்தார்.

பாடுமுனைப் பாடியர்கோன் பாடலின்மெய்ப் பாடகங்கொண்
டாடுவரப் பாலு மடிச்சார்ந்தார்—நீடரன்பாற்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. (௮௨)

சுந்தரமூர்த்திநாயனார்.

பித்தரென வைதாற் பிழைபொறுத்தன் மாத்திரமோ
வத்தரா ரூரர்க் கருள்புரிந்தார்—நித்த
மழிவந்த செய்யினு மன்பாற ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். (௮௩)

---

(௮௨) முனைப்பாடியர்கோன்- சுந்தரமூர்த்திசுவாமிகள். மெய்ப்பாடாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோ ராற்றான் வெளிப்படுதல் என்பர் நச்சினார்க்கினியர். "மெய்ப்பாடியல்வகை மேதகவிரிப்பின்- மெய்க்கட் பட்டு விளங்கிய தோற்றம் - செவ்விதிற் றெரிந்து செப்பன்மற் றதுவே" என்றார் பிறர். கற்று-[உபதேசமொழிகளை அநுபவமுடைய தேசிகர்பாற்] கேட்டு. ஈண்டு-இப் பிறப்பின்கண்ணே. ஈண்டுவாராநெறி-வீட்டுநெறி.

(௮௩) "பிழைகொண்டொருவிக்கெடாதன்புசெய்யிற்பிறவியொன்னு- முழைகொண்டொருவன்செல் லாமைநின்றம்பலத்தாடுமுன் னோன்" எனத்திருவாதவூரடிகள்திருவாய்மலர்ந்ததறிக. அருள்- அருளும் [இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது]. தம்பிரான்றோழராகலின் இக்குறட்பாவினை ஈண்டு உதகரித்தாரென்க. அழி-அழிவு [முதனிலைத்தொழிற்பெயர்]. வழிவந்த-பழையதாய்வந்த. கேண்மையவர்-நட்பினையுடையார்.

பூசலார்நாயனார்.

வானமுதற் றூவி வரைமனத்தே கட்டியரன்
ஞானமயப் பூசலார் தாபித்தார்—ஞான
மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (௭௪)

மங்கையர்க்கரசியார்.

ஞானசம் பந்தரங்கே நண்ணியபி னெண்ணிலா
தாணி விளைத்தானே யமணர்க்கு—மானியார்
கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. (௭௫)

நேசநாயனார்.

ஈசருடை மெய்யடியார்க் கேதேனுஞ் செய்வனென்று
பேசருடை கோவணங்கீ ணெய்தளித்தா—ராசைபுரிந்
தன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. (௭௬)

---

(௭௪) வானம்-உபானம், கோபுரத்தின்கீழ்ச் சித்திரவரி. தூவி-ஸ்தூபி, சிகரத்தின்மேலுறுப்பு. வரை-வரையும், மட்டும். மலர்மிசையேகினான்-[நினைவாரது உள்ளக்] கமலத்தின்கண் [அவர் நினைத்த வடிவோடு விரைந்து] சென்றவனது.

(௭௫) அங்கே-மதுரையின்கண்ணே. ஆணி-கேடு. மானியார்-மங்கையர்க்கரசியார். கொக்கொக்க-கொக்கு இருக்குமாறுபோல இருக்க. 'மடைத்தலையி-லோடுமீனோடவொருமீன்வருமளவும், வாடியிருக்குமாங் கொக்கு' என்றார் ஒளவையாரும்.

(௭௬) ஈசருடை-ஈசருடைய. உடை-சீலை. கீள்-அரைஞாணுக்குப் பிரதியாக நூலினால் தகட்டுவடிவாய்ச்செய்யப்பட்டது. அன்று-இறக்குநான்று.

கோச்செங்கட்சோழநாயனார்.

முந்திகலாற் செங்கணான் மூண்டானைய காவினுப்பின்
றந்திபுகா வாயில் சமைத்தானே—யெந்தைக்
குடம்பா டிலாதவா வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. (௮௭)

சிலம்பியாய் நூற்கோயில் செய்தசெங்க ணான்பின்
லங்கடொ றுங் கோயில் சமைத்தார்—நல்கூர்
தங்கருமஞ் செய்வார் மறறல்லா
ளை புட பட்டு. (௮௮)

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

கண்டயாழ்ப் பாணைப்போன்
ந்த நட்பினரார்—மானத்து
ாயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
ரை தகிலர் பாடு. (௮௯)

---

(௮௭) இகல்-பகை. பின்-அடுத்தபிறப்பின்கண். தந்திபுகா-யானை புகாத. உடம்பாடிலாதவர் - மனப்பொருத்த மில்லாதார். குடங்கர்-குடில்.

(௮௯) கானம்-இசை. ஞானத்தலைவர் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். மானத்து-பெருமையொடு. மேற்பிறந்தார்- உயர்ந்த சாதிக்கட்பிறந்தார். பாடு-பெருமை.

சடையநாயனார்.

ஆம்பற்றி னுற்சடைய னாலால சுந்தரரைத்
தாம்பெற்ற பேறே தவப்பேறே—யோம்பிப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. (கூ௰)

(கூ௰) ஆரழலாடியாகிறபெருமான் ஒருநாள்தன்பேரழகாடியிற்கண்டு சிரமசைத்தழைப்ப அங்கோருருப்பெற்றுவரச், 'சுந்தர !வருக' என்றனர். அச்சுந்தரனார் திருக்கைலாயத்திற் பெருமானுக்குப் பூக்கொய்து மாலைதொடுத்தலாகிய திருப்பணியைமேற்கொண் டிருந்தனர். பாற்கடல் கடைந்தஞான்று விடமெழக்கண்டு கார்க்கடல்வண்ணன் முதலியோர் விண்ணப்பஞ்செய்துநின்று வெருவப் பெருமான் ஏவியவாறே அவ்வல்விடத்தைக் கொண ர்ந்ததனால் ஆலாலசுந்தரராயினர். அவரே உலகுய்யுமாறு சடையனார் திருக்குமாரராயவதரித்தலின் ஈண்டு 'ஆலாலசுந்த ரரை' என்றார். 'ஒருதினமாடியிற்றன்னொளிகெழுவிம்பநோக் கிச், சுருதியோர் நான்குங்காணத் தூயவெம்பெருமானிங்கு, வருதியென்றுளமகிழ்ந்து மலர்முடியசைக்க முன்னர், திருவரு ள்பெற்றுவாழுஞ் சிவகணங்களிற்சிறக்க' என்னும் திருநாவ லூர்ப் புராணப்பாவும்; 'கயிலைநாயகன் காமருதன்னுருப்,பயி லுமாடியிற் பார்த்தங்கழைத்தலும்,வெயில்செய்வெங்கதிர்கோடி கிரரயெனச், செயிரிலாதமெய்த் தேசொடுந் தோன்றினன்', ' அன்னசுந்தரற்காலாலமாழியின், முன்னமுன்னவனுண்ணம ற் றன்னதைத், தன்னகங்கைத்தழீஇக்கொடுநல்கலாற், றுன்னு மாலால சுந்தரநாமமே' என்னும் பேரூர்ப்புராணப்பாக்களும் அதனைத் தெரிப்பதுணர்க. அறிவறிந்தமக்கள்-ஆண்மக்கள்.

இசைஞானியார்.

உற்றவிசை ஞானிதா னோங்குபுகழ்ச் சுந்தரரைப்
பெற்றதினு மன்புமிகப் பெற்றாளே—முற்றறிவா
லீன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய். (௬௧)

சுந்தரமூர்த்திநாயனார்.

கனிந்திசையங் கண்டார் கமலினியுங் காவி
லனிந்திதையுஞ் சுந்தரர்கண் டாங்கே—புனைந்துரைத்தென்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனுமில. (௬௨)

சுந்தரரைக் கண்டலர்கொய் தோகையர்சென் றொருநா
ளெந்தைகயி லைக்கிறையா லின்றளவும்—வந்ததே
கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. (௬௩)

---

(௬௧) முற்றறிவால்-அவரது முற்றுணர்வுகண்டு.

(௬௨) காவில்-நந்தவனத்துள். இசையும் கனிந்து- உள்ளம் உருகி. கண்டாங்கே- கண்டவாறே. என்னபயனும் இல- ஒருபயனு முடையனவாகா.

(௬௩) "ஒருநாள் கண்டுசென்றார்" எனமுடிக்க. தோகையர் - அநிந்திதை, கமலினியென்பார். அலர்-பலரறிந்து தூற்றுதல். அலர்திங்களைப் பாம்புகொண்டற்று - சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போல உலகெங்கும் பரவியது. ஈரிடத்தும் மன்னும் உம்மையும் அசைநிலை.

அங்கருளா லாரூ ராசையற வேபரவை
சங்கிலியார் மாலேய் தவிர்ப்பித்தா—னெங்கோன்
பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னேய்க்குத் தானே மருந்து. (கஈச)

சீரூர் கயிலேயினுஞ் செல்லுநாள் வில்லவனை
யாரூரர் சிந்தித் தழைத்திட்டா—ரோரார்
முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. (கஈரு)

தன்னாரு சேரரொடு தாங்கயிலைக் காரூரர்
வெள்ளானை மேற்சென்றார் விண்ணாறு—யுள்ளமிசை
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். (கஈசா)

---

(கஈச) மால்நோய்- காமநோய். ஆரூரர் - சுந்தரமூர்த்திசுவாமிகள். எங்கோன்-கைலாசநாதன். அணியிழை- அன்மொழித்தொகை.

(கஈரு) கயிலேயினுஞ் செல்லுநாள்-'கயிலேயிற்செல்லுநாளினும்' என உம்மை பிரித்துக்கூட்டுக. வில்லவனை - விற்கொடியுடைய சேரமான்பெருமானுயனாரை. ஆரூரர் - சுந்தரமூர்த்திசுவாமிகள். நக-மலர. அகம்-அகமும் [இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.]

(கஈசா) சேரர்-சேரமான்பெருமானுயனார். ஆறுய்-வழியாய். ஈண்டு-இம்மைக்கண்.

நாவலர்வெள் ளானை நடாத்தவுப மன்னியர்போ
லாவ னுடன் சென்று பணிந் தார்களோ—தேவர்
பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து. (௧௭)

பாலாழி யுண்ட பழமுனிசொன் னான்முனிவர்க்
காலால சுந்தரன்சொ லங்கினி தாய்—மேலாம்
பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. (௧௮)

---

(௧௭) நாவலர்-சுந்தரமூர்த்திசுவாமிகள். பெருமை-பெரியோர் [பொருளின்றொழில் பண்பின்மேலேற்றப்பட்டது; இஃதோருபசார வழக்கு]. அணியும்-புனையாநிற்பர், பிறரிற்றமக்கோர் மிகுதியையேற்றிக்கொள்வர்.

(௧௮) பாலாழியுண்ட பழமுனி-உபமன்யு. 'பாலுக்குப்பாலகன் வேண்டி யழுதிடப்பாற்கட லீந்தபிரான்'' என்னுஞ் சேந்தனாயனாருண்மொழியும், ''கூவுதலும்பாற்கடலே சென்றவனைக் கூடுகவென், றேவினான் பொற்கயிலை யெம்பெருமான் - மேவியசீ, ரன்பாற் புலிக்காலன் பாலன்பா லாசையினாற், றன்பாற்பால் வேண்டுதலுந்தான்'' என்னும் நக்கீரதேவநாயனார் பாவும், ''கண்பிசைந் தொருசேயின்னுங் கலுழினுந் தனைக்கொடுப்பன், மண்பிசைந்துண்ட மாயன்மறுத்திட வலிய னல்ல, னண்பிசைந் திறைவனுக்கே நாமிடனாவமென்று, பண்பிசைந்தலைதிரண்ட பரிசினின்றிமெக்குன்றம்'' என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் செய்யுளும் ஈண்டறியத்தகும். சொல்-புகழ்.

தம்முடைய தோழராவர் தம்முடைய தோழமையும்
வம்பினென வண்கயிலை வாழ்வித்தார் — பெம்பிறைவா
நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை. (௯௯)

சொல்வைத்த சேரனுலாச் சொல்லக் கயிலையரன்
செல்வத் திருச்செவியிற் சேர்த்ததே — மல்வைத்த
செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை. (௱)

## திருத்தொண்டர்மாலை முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

---

(௯௯) தம்முடைய தோழர்- சுந்தரமூர்த்திசுவாமிகள். 'தம்பிரான் றோழர்' எனனும் காரணக்குறிப்பாற் பட்டருமை "அறிந்து செல்வமுடையானை யளகைப் பதியாற் றோழமைகொண்டு, நிறைந்த கல்வியுடையானு மொருவனைத் தோழனாகவிருந்து, துறந்த முனிவர் தொழும்பரவைத் துணைவனைத் தோழமைகொண்டான், சிறந்தவறிவு வடிவமாயத் திகழுந்தறகட்பெருமானே" என்றார். தம்முடைய தோழரை-அவர் தமது தோழராகிய சேரமான்பெருமானையனையும். "உடைய நாயகனையேயா னுயர்வரைக் கயிலை, யடையு நாவலூ ரடிகளோ டடுத்தமன்னவன்போற், படைகை யேந்திரா பாங்குறிற் படையொடுமவர்தம், புடைய ராம்படி பரியயக காந்தருமம பொலிவ" என்னுந் திருவானைக்காப்புராணப் பாட்டினை நோக்குக. வீற்றிருக்கை-அரசிருக்கை. கொட்பு-திரிபு. ஒல்லுமவாய்-இயலுமெல்லை யெல்லாம்.

(௱) சேரனுலா-திரு ஆதியுலா. மல்-வளம.